# திருவிளையாடற் புராணம்

## பாகம் -2



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**
**மற்றும் ஆய்வு மையம்**
**தஞ்சாவூர்**

சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண். 534

# திருவிளையாடற் புராணம்

(பரஞ்சோதி முனிவர் அருளிச் செய்தது)

## இரண்டாம் பாகம்

## 2. கூடற்காண்டம்

## 3. திருவாலவாய்க் காண்டம்

(இலக்கியப் பகுதி)

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்

**புலவர் வீ. சொக்கலிங்கம்,**

தமிழ்ப் பண்டிதர் (ஓய்வு)

சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம்,

தஞ்சாவூர்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம் மற்றும்**

**ஆய்வு மையம்**

தஞ்சாவூர்.

2010 விலை ரூ. 250 - 00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருவிளையாடற் புராணம் (இரண்டாம் பாகம்) |
| பதிப்பாசிரியர் | : | புலவர் வீ. சொக்கலிங்கம் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண். | : | 534 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2010 |
| தாள் | : | 18. 6 கி. கி. சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : | 532 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | செக்ஷன் தையல் |
| பொருள் | : | புராணம் |
| விலை | : | ரூ. 250 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் அறிவுச் செல்வமாகப் பயன்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் நம் சரசுவதி மகால் நூலகமாகும். சுவடிக் கருவூலமாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பண்மொழி ஆய்வு மையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது.

இந்நூலகம் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிற நாட்டினரும் பயன்படுத்தி வருகின்ற ஓர் அரிய ஞான ஆலயமாகும். பாரதநாடு பழம்பெரும் நாடு. உலகின் மிகச் சிறந்த நாகரிகத்திற்கும், பண்பாட்டிற்கும், மொழி வளத்திற்கும், இலக்கிய, இலக்கண மேம்பாட்டிற்கும், இயல், இசை, நாடகம், ஓவியம், சிற்பம், கட்டிடம் போன்ற நுண் கலைகளுக்கும் மெச்சும் அறிவிற்கும் மேதியினில் உயர்நாடு நம்நாடு. இமய முதல் குமரி வரை சைவநெறி தழைத்துப் பரவியது எனினும் தமிழகத்தில் சைவஒளி பரவி நாயன்மார்கள் தோன்றி சைவநெறி வளர்த்தனர். சைவநெறி அன்பு, அறம், பக்தி, விருந்தோம்பல், பணிவு போன்ற வாழ்வியல் நெறிகளைக் கூறுவது.

இப்பதிப்பு பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணமாகும். சிவபெருமானது திருவிளையாடல்களைக் கூறுவது திருவிளையாடற் புராணம். தமிழில் நான்கு நூல்கள் சிவபெருமானது திருவிளையாடல்களை திரல்படத் தருகிறது. அவை:

1. பெரும் பற்றப் புலியூர் நம்பி இயற்றிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம். 2. தொண்டை நாட்டு இலம்பூர் வீமநாத பண்டிதர் இயற்றிய கடம்பவன புராணம். 3. தொண்டை நாட்டு வாயற்பதி அனதாரியப்பன் இயற்றிய சுந்தர பாண்டியம். 4. பரஞ்சோதியார் இயற்றிய திருவிளையாடற் புராணம். 5. மேற்கண்டவற்றுள் முதலாவது கூறப்பட்ட புராணமும், இறுதியாகக் கூறப்பட்ட புராணமுமே குறிப்பிடத்தக்கவை. கல்லாடம், சிலப்பதிகாரம், தேவாரம், திருவாசகம் ஆகியனவும் சில திருவிளையாடல்களைக் குறிப்பிட்டுள்ளன. மிகவும் சிறப்புப் பெற்றுத் திகழ்வது பரஞ்சோதியார் இயற்றிய திருவிளையாடற் புராணம். பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தைவிட இருமடங்கு பெரியது. ஆனால் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமே பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தைவிடக் காலத்தால் முந்தியது.

பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம் சோழநாட்டில் திருமறைக்காட்டில் பிறந்த பரஞ்சோதியார் இயற்றியது. அங்கயற்கண்ணி இவரது கனவில் தோன்றி, இறைவன் திருவிளையாடலை இன்னே பாடுக என ஆணையிட்டதாக சைவர்கள் கூறுகின்றனர். வடமொழி நூலான ஆலாசியமான்மியம் இதனுடைய முதல் நூல் என்பார்கள். சொல் நோக்கம், பொருள் நோக்கம், சாமுத்திரிகா லட்சணம், அசுவ லட்சணம், இரத்தின

பரிட்சை, பரதம் முதலியவற்றிற்கு இந்நூல் இலக்கியமாகத் திகழ்கிறது என்று குறிப்பிடுவார்கள். வடமொழி நூல் முதல் நூல், ஆயினும் சொற்சுவை, பொருட்சுவை, அருமை, பெருமை, தொன்மை, மென்மை, நன்மை, வனப்பு ஆகிய தன்மைகள் இதில் அமைந்துள்ளன. இதில் இடம் பெற்றுள்ள 3360 விருத்தப் பாக்களும் இனிமையும் தெளிவும் உடையன.

மதுரையில் சிவபெருமான் நடத்திய 64 திருவிளையாடல்களை இந்நூல் கூறுகிறது. மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திருவாலவாய்க் காண்டம் என மூன்று காண்டங்களை உடையது.கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், நாட்டுப் படலம், நகரப்படலம், கைலாய வருகை, புராண வரலாறு ஆகிய பகுதிகள் முதலில் இடம் பெற்றுள்ளன. தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்புக் கூறிப் பின் திருவிளையாடல் அறுபத்து நான்கினையும் தொகுத்துரைத்து அதற்குப் பதிகப் படலம் என்று பெயர் கொடுக்கும் முறை உள்ளது.

இந்நூலகத்தில் உள்ள சுவடி எண். 901 இல் கூறப்படும் திருவிளையாடற் புராணம் பரஞ்சோதியார் அருளிய திருவிளையாடல் புராணமாகும். இந்நூலகத்தில் தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற புலவர் திரு. வீ. சொக்கலிங்கம் அவர்கள் இந்நூலைப் பதிப்பித்துள்ளார்கள். இவர் பதிப்பு பணியில் பழுத்த அனுபவமும் சிறந்த ஆய்வு நோக்கும் கொண்டவர். இந்நூலகத்தில் சற்றேறக்குறைய 40 சுவடிகளைப் பதிப்பித்த பெருமைக்கும் பெற்றிக்கும் உடையவர். மேலும், தமிழ்ச் சுவடிகள் 10 அட்டவணைப் பட்டியலை வெளிக் கொணர்ந்த பெருமைக்குரியவர். தற்போதைய திருவிளையாடல் புராணப் பதிப்பில் இவர் அறிமுக நூல்களின் பட்டியலைத் தந்துள்ளார்கள். அதில் பல புராணச் செய்திகளை நிரல்பட தொகுத்துக் கூறியுள்ளார். பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணத்தில் கூறப்படும் சொக்கலிங்கப் பெருமானின் அருமைத் திருநாமங்கள், நம்பி திருவிளையாடல் புராணத்தில் காணப்படும் திருநாமங்கள், இவ்விரு திருவிளையாடற் புராணங்களுக்கும் உள்ள வேறுபாடுகள், திருவிளையாடல் புராணம் தொடர்புடைய பிற நூல்கள் வரலாற்றுச் செய்திகள் என பல்வகைச் செய்திகளையும் நிரல்பட தொகுத்துக் கூறியிருப்பது மிகவும் பாராட்டிற்குரியது. இதில் மதுரைக் காண்டம் முன்பே முதல் பகுதியாக வந்துள்ளது. கூடற்காண்டமும், திருவாலவாய்க் காண்டமும் இரண்டாம் பகுதியாக தற்போது வெளியிடப்படுகிறது.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினிப் பிரிவில் பணியாற்றியவர்களுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொ.) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
3-4-2010

**மு. கருணாகரன்,**
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர் (பொ)
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

உ

திருச்சிற்றம்பலம்

# என்னுரை

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக்கை மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமாதேவி
பணிசெய்து நாடொறும் பரவ
பொங்கழல் உருவன் பூதநாயகன் நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே!

-திருஞானசம்பந்தர்

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய் பின்னைப் புதுமைக்கும் புதுமைப் பெற்றியனாகிய மதுரை அங்கயற்கண்ணம்மை உடனாய ஆலவாய்ச் சொக்கேசன் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு மானிடச்சட்டை தாங்கியும், வேறு பல் உருக்கொண்டும், மதுரையம்பதியில் எழுந்தருளி 64 திருவிளையாடல்களை நடாத்தித் திருவருள் பாலித்துள்ளான்.

கருணைக்கடலாம் கதிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் விளையாட்டு, வரலாற்றுச் சின்னங்கள் மதுரையில், ஆவணி மூலவீதி, எழுகடல் திருக்குளம், வன்னியும் கிணறும், இலிங்கமும் முதலான பலவும் காணக்கிடைக்கின்றன.

ஏழை பங்காளனாம் எந்தை சொக்கேசன் தமியளாகிய வந்திக்காகக் கூலியாளாக வந்து, மண் சுமந்து பிட்டினைக் கூலியாகக் கொண்டு, மண் சுமந்து வந்து கரையில் கொட்டி, முழுதும் அடைபடாமல் சுணங்கியபோது, மற்றவர்கள் அரிமர்த்தன பாண்டியனிடம், உள்ளொடு புறங்கீழ் மேலாய் உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வனை "இவன்" எனச்சுட்டிக் காட்டினர். காட்டொணாக் கடவுளை மதுரை வையைக் கரையினில் சுட்டிக் காட்டினர். முன்பு திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தபோது, உமையம்மையின் திருமுலைப் பாலுண்டதும், தன் தந்தையார் சிவபாத இருதயரிடம் சிவபெருமானை. "பெம்மான் இவன்" என்று சுட்டிக் காட்டினார்.

அதுபோல மதுரையில் இவன் எனச் சுட்டிக் காட்டப்பட்ட இறைவனாம் கூலியாளை, மன்னன் தன் கையில் பொற் பிரம்பு வாங்கி அண்டமும் அளவிலாத உயிர்களும் ஆகமாகக் கொண்டவனைப் புடைத்தான். மண்தனை உடைப்பிற் கொட்டி மறைந்தான் இறைவன்.

மன்னன் அடித்த அடி, பாண்டியன் முதுகில் பட்டது. மற்றெவ்வுயிர்கள் மேலும் பட்டது. உயிர்கள்பால் உமையொருபாகர் இரக்கம் கொண்ட இத்திருவிளையாடல் 61வது மண் சுமந்த படலமாக இந்த இரண்டாம் பகுதியில் இடம் பெற்றுள்ளது.

முதற் பாகத்தில், கடம்பவனபுராணம் முதலாகப் பல புராணங்களிலும், பல நூல்களிலும், சொக்கேசன் திருவிளையாடல் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. அரியதொரு ஆய்வு நூலாக அமைந்துள்ளது. அதில் 18வது வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம் ஈறாக 1304 திருவிருத்தங்களுடன் மதுரைக் காண்டம் நிறைவு பெற்றுள்ளது. குறிப்புரைகளும் தரப்பட்டுள்ளன.

முதற் பாகத்தில், மதுரைச் சொக்கேசப் பெருமானின் திருநாமங்கள் 296 மதுரைக் காண்டத்திலும், 377 கூடற் காண்டத்திலும், 377 திருவாலவாய்க் காண்டத்திலும், பரஞ்சோதி முனிவர் யாத்தருளிய திருவிளையாற் புராணச் செய்யுட்கள் 3364 னின்றும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

இதில் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணம், பெரும்பற்றப் புலியூர் நம்பிகளின் திருவிளையாடற் புராணம், கடம்பவன புராணம், பயகரமாலை ஆகியவைகளின் படல வைப்பு முறைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

மதுரைத் திருவிளையாடல் எனவும், திருவிளையாடற் புராணம் எனவும் வழங்கப்பெறும் தமிழிலக்கிய புராணமாகிய இத் திருவிளையாடற் புராணம், தனித்தமிழின் சிறப்புக்களையும், பசுந்தமிழின் தொன்மைகளையும் அவற்றின் மேன்மைகளையும், அருமைகளையும், அற்புதச் செயல்களையும், பிறவற்றையும் எடுத்தியம்புகின்றது.

அதனை,

"கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமோடமர்ந்து
பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணிடைச்சில விலக்கண
வரம்பிலாமொழிபோல்
எண்ணிடப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ!"

என்கிறார் பரஞ்சோதி முனிவர். மேலும் செயற்கரிய செயலில் சிறந்து விளங்கும் வரலாற்றினைக் கூறித் தண்டமிழின் மேன்மையை விரித்துரைக்கின்றார்.

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும்
முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்பு
பெண்ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ
சாற்றீர்!"

இதற்கு மேலும் அருஞ்செயல்கள் பல செய்த தமிழ் மொழியே தமிழ் நாட்டுத் திருக்கோயில்களில் வழிபாட்டு மொழியாக இருக்க வேண்டுமே அன்றி மறுபுலச் சொற்களோ சாற்றீர் என்கின்றார்.

அந்தந்த நாட்டில் அந்தந்த மொழிகளில் அருஞ்செயல்களை நிகழ்த்துவதே இயல்பும் பெருமையும் உடையது. இந்த அடிப்படையில் தமிழ் நாட்டில் தெய்வத் தமிழ்தான் அருஞ்செயல்கள் செய்தது. ஆகவே தென்தமிழ் இறைவனால் அங்கீகரிக்கப்பட்ட செம்மொழி.

அருவமும், உருவமும், அருவுருவமும் ஆகிய இறைவன் ஆன்மாக்களைக் காக்கும் பொருட்டே அம்பலத் தாடுகின்றான். அவன் நோக்கும் திசை தென்திசை.

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம்"

என்று கூறிய அப்புலவனின் பைந்தமிழின் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலும் தென்திசை நோக்கியே பாம்பணையில் பள்ளிகொண்டுள்ளான். ஆம், இன்றும்

திருமால் திருக்கோயில்களில், பட்டாச்சாரியார்கள் இறை வழி பாட்டில் பாசுரத் தமிழ் பகராமல் வழிபடமாட்டார்கள். அதுபோலவே நம் சிவன் கோயில்களிலும் திருமுறை ஓதாமல் வழிபாடு நிகழ்த்துவது சரியன்று. வழிபாட்டில் திருமுறைகளை ஓதுதலே சிறப்பு.

திருமுறைகளை அருளிய பேராளர்கள், நல்ல தமிழில் இறைவனை வழிபட்டுப் பலனடைந்து, அவைகளை நாம் தொடர நமக்கு நல்கியுள்ளார்கள்.

அவற்றுள் கூடல் மதுரையின் பாடல்கள் மிகமிக அருமையாக உள்ளன. திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய

"நீலமா மிடற்று ஆல வாயிலான்
பால தாயினார் ஞாலம் ஆள்வரே!"

எனத்தொடங்கும் பாடலும் பிறவும் போற்றத் தக்கன. அவர் பாடிய பதிகங்கள் மதுரையில் ஒன்பது.

திருநாவுக்கரசர்

"வேதியா வேதகீதா விண்ணவர் அண்ணா என்றென்று "

எனத்தொடங்கும் பாடல் முதலாக பதிகங்கள் இரண்டு

மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய மதுரைச் சிறப்புகளுக்கும் அளவே இல்லை. மதுரைச் சொக்கன் ஆடிய ஆடல் விளையாட்டுக்களின் பெருமைக்கும் அளவே இல்லை.

"பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மாள்
பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்து ஈசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால்
மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண்
அம்மானாய்!"

பிறவும் அன்ன.

மேலும் அருளாளர்கள் பலர் மதுரை நாயகனைப்பாடி மகிழ்ந்துள்ளனர்.

ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு விண்பழித்து மண்புகுந்த பிறவா யாக்கைப் பெரியோன், ஆன்மாக்கள் நம்பும்பொருட்டு சடைமறைத்துக் கதிர் மகுடம் தரித்து வழுதி மருமகனாகி, மீன நோக்கின் மடவரலாம் மீனாட்சியை மணந்து உலகம் முழுதும் ஆண்டார். அங்கயற்கண்ணியை மயக்கும் பேரழகுடையவன் மட்டுமல்லாது, கண்டாரை யெல்லாம் சொக்கவைக்கும் அழகுடையனாதலால் "சொக்கன்" எனப்பட்டான். அத்தகைய சொக்கனையும் சொக்கவைக்கும், அவனது அங்கமான அங்கயற்கண்ணியும், மீன்கள் எவ்வாறு தன் முட்டைகளைக் கண்ணால் கண்ட மாத்திரத்திலேயே குஞ்சு பொறிக்க வைப்பது போலவே, அடியவர்கள் வந்து அடிபணியும் போது அவர்களது குறைகளைத் தன் கண் பார்வையினாலேயே அகற்றி, அருள் பாலிக்கும்

பேழகுடையவளாதலால் இவளைச் "சொக்கி" எனல் பொருந்தும்.

திருஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்ய ஏற்பாடு செய்த மணப்பெண் சொக்கியார் என்பதாக அறியமுடிகிறது.

மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளுக்கு ஏற்ற நீதிகளை உரைப்பது திருவிளையாடற்புராணம். தடாதகைப் பிராட்டியார் பாண்டியனுக்குத் திருமகளாகி ஆய கலைகள் அறுபத்து நான்கும் கற்று தக்க வயதில் முடிபுனைந்து திசையரசர்களை வென்று, சொக்கேசனை மணந்தாள்.

கணவன் இருக்க, தான் முடிபுனைந்து அரசாள்வது சரியல்ல வென்று தன் கணவன் சோமசுந்தரருக்கு அரசளித்து மகிழ்ந்தாள் பெண்ணரசி மீனாட்சி. இதனை,

"செழியர்பிரான் திருமகளாய்க்கலை பயின்று
முடிபுனைந்து செங்கோ லோச்சி
முழுதுலகும் சயங்கொண்டு திறை கொண்டு
நந்திகண முனைப்போர் சாய்த்துத்
தொழுகணவற்கு அணிமணமா லிகைசூட்டித்
தன்மகுடம் சூட்டிச் செல்வம்
தழைவுறுதன் அரசு அளித்த பெண்ணரசி
அடிக்கமலம் தலைமேல் கொள்வாம்!"

என்கின்றார் பரஞ்சோதியார். இதனால், பெண்கள் தான் எவ்வளவு உயர்வு பெற்றிருந்தாலும் கணவனுக்கு மதிப்புத் தரல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது.

இவனே எல்லா இடத்திலும் முளைத்த லிங்கம்.

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்-பாலொளியாம்
மத்தனே கூடல் மதுரா புரியுமையாள்
அத்தனே ஆலவா யா!

என்கிறது சொக்கநாத வெண்பா.

இத்தகு சிறப்புவாய்ந்த திருவிளையாடற் புராணம் பல இடங்களில் பல பதிப்புகள் ஒளிர்கின்ற போதும் நம் சரசுவதி மகாலிலுள்ள 324ஆம் எண்ணுள்ள ஓலைச்சுவடி மூலம் பதிப்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, தமிழ் வல்லுநர்கள் குழுவின் பரிந்துரையின் பேரில் இதனை நமக்குத் தந்துள்ளனர்.

இதன்படி இத்திருவிளையாடற் புராண ஆய்வு நூலாக இதன் முதற்காண்டமான மதுரைக் காண்டம் நிறைவுற்று 8-12-2008 அன்று முதற்பாகமாக வெளிவந்தது.

இதன் தொடர்ச்சியான கூடற்காண்டமும், திருவாலவாய்க் காண்டமும் இரண்டாம் பாகமாக தற்போது வெளிவருகின்றது. இதனைப் பதிப்பிப்பதற்கு அனுமதி தந்த அப்போதைய மாவட்ட ஆட்சியரும் சரசுவதி மகால் இயக்குநருமான திருமிகு சி. கோசலராமன் இ.ஆ.ப., அவர்கட்கும், தற்போதைய மாவட்ட ஆட்சித் தலைவரும் சரசுவதி மகால் இயக்குநருமாகிய திருமிகு. எம். எஸ். சண்முகம் இ.ஆ.ப., அவர்கட்கும், மேற்படி சரசுவதி மகால் நிருவாக அலுவலரும் வெளியீட்டு மேலாளர் பொறுப்பாளருமான சிவத்திரு சாமி. சிவஞானம்

அவர்கட்கும், இந்நூலினை நன்முறையில் அச்சிட்டுத் தந்த மேற்படி மகால் பணியாளர்கட்கும் எமது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இதில் காணும் குற்றம் நீக்கி குணம் கொண்டு வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன். மக்கள் யாவரும் இந்நூலினை மனங்கொண்டு நல்லருள் பெற அந்தஆலவாய்ச் சொக்கனை வேண்டுகிறேன்.

இங்ஙனம்,

**புலவர் வீ. சொக்கலிங்கம்,**

முன்னாள் தமிழ்ப் பண்டிதர்

சரசுவதி மகால் நூலகம்

*தஞ்சாவூர்*

*1-6-2010*



# படல வரிசை

திருச்சிற்றம்பலம்



உ

ஓம் ஸ்ரீ மகாகணாதிபதயே நம:

# உ. கூடற் காண்டம்

பத்தொன்பதாவது

## நான்மாடக்கூடலான படலம்

### பரமசிவம்

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு
புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல வினையன்றி நின்ற
பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச
வெளியென்ப கூடன் மருகிற்
பாதங்க ணோவ வளையிந்த னாதி
பகர்வாரை யாயு மவரே ! (1)

### சிவசக்தி

திருமகள் வலக்கண் வாக்கின்
சேயிழை யிடக்கண் ஞானப்
பெருமக ளுதற்க ணாகப்
பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவ
ளவளுயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி
யொசிந்தபூங் கொம்பி னின்றாள். (2)

கதிர்மதி மிலைந்த வேணிக்
கண்ணுதல் வருண னேய
அதிர்கடல் வறப்பச் செய்த
வாடலீ தனையா னேய
முதிர்மழை யேழின் மேலு
முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக் கூட
லாக்கிய வண்ணஞ் சொல்வாம். (3)

எற்றுதெண் டிரைநீர்ச் சேர்ப்பன்
றன்செய விழுக்கி நாணம்
உற்றிடு கண்ணுஞ் சேப்ப
வுடன்றெழு கோபச் செந்தீப்
பற்றிட வாகம் வெம்பிப்
பரவையும் யாறும் வெந்து
வற்றிட வெகுண்டு நின்றான்
மானமும் வலியுங் குன்றான். (4)

நளிர்புனன் மதுரை மூதூர்
நாயக னாட றன்னைத்
தெளிகில னாகிப் பின்னுஞ்
செழுமுகி லேழுங் கூவிக்
குளிர்கடல் வறந்த தென்னக்
குடித்தெழுந் திடித்துப் பெய்யா
ஒளிவளர் மதுரை முற்று
மொல்லெனக் களைமி னென்றான். (5)

பொள்ளென மேக மேழும்
புகுந்துபார் தெரிய முந்நீர்ப்
பள்ளமும் வறப்ப முற்றப்
பருகிமெய் கருகி மின்னித்
தெள்ளருந் திசையும் வானுஞ்
செவிடுறப் பிலமும் பாரும்
விள்ளமால் வரைக ளெட்டும்
வெடிபட மேருச் சாய. (6)

ஊழிநாள் வெடிக்கு மண்ட
　　கடாகத்தி னொலிபோ லார்த்துப்
பாழிவா னுருமு வீழப்
　　பணாடவி மணிகள் சிந்தி
ஆழிநீர் ஞாலந் தாங்கு
　　மராவுட னெளியத் திக்கிற்
சூழிமால் யானை நின்ற
　　நிலைகெடத் துனுக்கங் கொள்ள. (7)

வெள்ளிய நீறு பூத்து
　　முழவென வீங்கு காய்போற்
றெள்ளிய வாலி சிந்தக்
　　திரண்டதிண் பளிக்குத் தூண்போல்
ஒள்ளிய தாரை சோர
　　வும்பர்மீன் கணங்க ளோடுந்
துள்ளிய திரையி லாடு
　　மீன்கணந் துடித்து வீழ. (8)

ஆர்த்தெழு கொண்மூ வேழுஞ்
　　சராசர மனைத்துஞ் சூழ்ந்து
போர்த்தன ஞால முண்ணப்
　　புக்கதோர் வடிவங் கொண்ட
தீர்த்தனில் விசும்பும் பாருந்
　　திசைகளுந் தெரியா வாகப்
பார்த்தகண் ணுழையா வாகப்
　　பரந்திருள் கான்ற தன்றே. (9)

பைஞ்சுட றெறிக்கும் பச்சை
　　காறொளி பரப்பு நீலம்
புஞ்சவா ளுடுக்க ளன்ன
　　நித்திலம் பொன்னங் குப்பை
செஞ்சுடர் மணிக டுப்புச்
　　சிதறுவ கணவ ரோடும்
விஞ்சையர் மகளி ரூடி
　　வெறுத்தெறி கலன்கள் போல. (10)

## மயங்கினது

கடியகா லுதைப்பப் பெய்யுங்
[1]கடுஞ்செல வெழிலி மாடக்
கொடியநீ ணகரைச் சூழ்ந்து
புதைத்தலுங் கோலொன் றோச்சிப்
படியெலாம் புரக்குங் கோனு
நகருளார் பலரும் ஞாலம்
மடியுநா ளிதுவே யென்னா
மயங்கினா ருயங்கி னாரே ! (11)

கண்ணுதன் மூர்த்தி தானே
யின்னமுங் காக்கு மென்னாப்
புண்ணிய நகரா ரோடும்
பொருக்கெனக் கோயி லெய்தி
விண்ணிழி விமான வாழ்க்கை
விடையவ னடிக்கீழ் வீழந்தான்
அண்ணலா ராடன் முன்னு
மறிந்துகை கண்ட வேந்தன். (12)

விடையினை யால முண்ட
மிடற்றினை கங்கை தாங்குஞ்
சடையினை சுஹற்றை வென்ற
தாளினை மேருச் சாபப்
படையினை யடியேந் துன்பப்
பாட்டினை நீக்கி யாளும்
நடையினை [2]யாகி யெங்க
ணல்லுயிர் காத்தல் வேண்டும். (13)

---

1. கடுத்சல. பா.வே. 2. யாகிலெங்க. பா.வே.

## மாரியை விலக்கினது

என்னலுந் தென்னர்க் கென்று
மெய்திய விடுக்கண் டீர்க்கும்
முன்னவன் முன்போ னான்கு
முகிலையு நோக்கி யின்ன
தொன்னக ரெல்லை நான்குஞ்
சூழந்துநான் மாட மாகி
[1]வின்னெடு மாரி யேழும்
விலக்குமி னெனவி டுத்தான். (14)

வந்துநான் மாட மாகி
வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து
சந்துவாய் தெரியா தொன்றித்
தாமொரு குடிலாய் மாடப்
பந்திகோ புரஞ்செய் குன்றங்
கால்கள்போற் பரிப்பப் போர்த்த
இந்துவார் சடையோ னேய
வெழிலிமா நகர மெங்கும் (15)

அன்னநான் மாடத் துள்ளு
நகருளா ரமைச்சர் வேந்தன்
றன்னநாற் கருவித் தானை
சராசரம் பிறவுந் தாழ்ந்து
முன்னைநா டனினு மின்ப
மூழ்கிநன் கிருந்தா ரூழிற்
பொன்னனாள் பாகன் றாளிற்
புக்கமர்ந் திருந்தா ரொத்தார். (16)

1. இந்நெடு. பா.வே.

## வருணன் விலகிநின்றது

கழைகெழு வரையி னுச்சி
கவிழ்கின்ற புயல்போற் கார்சூழ்ந்
திழைமணி மாடத் தும்ப
ரெறிதுளி யுடைந்து துள்ளத்
தழைகடல் வறப்ப வாங்கித்
தம்முடல் வறப்பப் பெய்து
மழைகளும் வெள்கி நின்ற
வருணனும் [1]விலகி நின்றான். (17)

நடுங்கினன் கழிந்த வச்ச
நாணமீ தூர மானம்
ஒடுங்கின னுள்ளத் துள்ளோ
ருவகைவந் [2]தெய்தப் பொற்பூத்
தடங்கரை குறுகா முன்னோய்
தணிந்துபின் றோய்ந்து பாசம்
மடங்கினன் மடங்கா வன்பின்
வள்ளலைப் பூசை செய்வான். (18)

புனிதநீ ராடிக் கண்டி
பூண்டுவான் கங்கை யாதி
வனிதையர் பசும்பொற் கும்ப
வாசநீர் வடித்து நீட்டப்
பனிமலர் சந்தங் கந்த
மணிக்கலன் பசும்பொன் னாடை
இனையன பிறவு மீன்று
கற்பக மெடுத்துக் காட்ட. (19)

ஐங்கனி யமுத மைந்து
கௌவிய மமுது தூபஞ்
செங்கதிர் விளக்க மின்ன
தேவரான் கொடுப்பச் சேற்கண்

1. (சுவடியில்) விலகி. அச்சுநூலில் வெள்கி. 2. தேமக் கஞ்சத் பா.வே.

நங்கைதன் பதியைப் பூசித்
தாயிர நாமங் கூறிப்
பைங்கதிர் முத்தஞ் சாத்தித்
தொழுதடி பணிந்து நின்றான். (20)

## வயிற்று வலி தீர்ந்தது

அருச்சனை யுவந்த வாதி
யமலனீ யாது வேண்டிற்
றுரைத்தியென் றோத நீர்க்கோ
னொல்லைதாழ்ந் தொன்றி னாலுங்
கரைத்திட வரிய விந்தக்
கடியவென் வயிற்று நோய்நின்
திரைத்திட [11]மாடு முன்னே
தீர்ந்திடப் பெற்றே னெந்தாய். (21)

வேறு

வேதமுதற் கலைகாட்சி முதலளவை
விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ்
சோதனையு ளகப்படாச் சோதியுனைச்
சோதிக்கத் துணிந்தே னந்தோ
பேதைமையே னிடத்தென்ன குணங்கண்டென்
பிணிதீர்த்தென் பெற்றா யாசை
கோதமிலாய் குற்றமே குணமாகக்
கொள்வதுநின் குணமோ வையா. (22)

பொன்னகரான் காலந்தாழ்த் துணையருச்சித்
தயர்ச்சியொடும் போன வாறும்
என்னெனயான் வினவியதும் வலாரியிறை
கொடுத்ததுமவ் விறைக்கு நேர்யான்
பின்னைவினா யதுமவன்சொல் வழியுன்னைச்
சோதித்த பெற்றி தானும்
முன்னவனே யுன்னருளா லெண்பிணிக்கு
மருந்தாகி முடிந்த வாறே. (23)

................................................................................................

11. மாடியின்னே. பா.வே.

ஆறுமதி முடியணிந்த வருட்கடலே
வயிற்றுநோ யன்றி மேனாள்
மாறுபடு மிருவினையு மலவலியுங்
கெடவீட்டின் வழியும் பெற்றேன்
வேறினிமந் திரமென்னை மணியென்னை
மருந்தென்னை மெய்ம்மை யாகத்
தேறுமவர்க் கிப்புனித தீர்த்தமே
பிணியனைத்துந் தீர்ப்ப தன்றோ. (24)

அடியனேன் முன்னஞ் செய்த
வபராத மிரண்டுந் தீரும்
படிபொறுத் தருள்வா யென்று
பன்முறை பரவித் தாழ்ந்து
மடிவிலா மகிழ்ச்சி பொங்க
வரங்களுஞ் சிறிது வேண்டிக்
கடியதன் னகரம் புக்கான்
குடதிசைக் காவல் வேந்தன். (25)

வன்றிறல் வருணன் விட்ட
மாரியை விலக்க வீசன்
மன்றிகழ் சடையி னின்று
நீங்கிய மேக நான்குங்
குன்றுபோ னிவந்து நான்கு
கூடமாக் கூடலாலே
அன்றுநான் மாடக் கூட
லானதான் மதுரை மூதூர். (26)

பத்தொன்பதாவது நான்மாடக் கூடலான படலம்.

முற்றும்

ஆகத் திருவிருத்தம் 1330.

இருபதாவது

## எல்லாம் வல்ல [1]சித்தர் திருவிளையாடற் படலம்

சத்த நான்மறைப் பொருள்வரை தள்ளுநீண் முடிமேல்
வைத்த கார்கணான் மாடமாய் மதுரைமேல் வருணன்
உய்த்த மாரியைத் தடுத்தவா றரைத்துமே றுயர்ந்தோர்
சித்த ராய்விளை யாடிய செயல்சிறி துரைப்பாம். (1)

தேட ருங்கதிர் மணிமுடிச் செழியனும் பாண்டி
நாட ருந்திரு வெய்திமே னல்லவீ டெய்தக்
கூட லம்பதி மேவிய குணங்குறி கடந்த
வேட ராங்கொரு சித்தமெய் வேடராய் வருவார். (2)

வட்ட வார்சடைக் குஞ்சியும் பூணநூன் மார்பும்
இட்ட நீறணி திலகமு மிணைக்குழை தூங்க
விட்ட வெள்ளைமுத் திரையுந்தோல் விரித்தபட் டிகையுஞ்
சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும். (3)

துய்ய வெண்பொடி யழிந்துமெய் சிவந்திடச் சுவடு
செய்யும் வெண்டிரட் படிகநீண் மாலையுஞ் சிவந்த
கையி லங்குகட் டங்கமுங் கண்டவர் மனஞ்சென்
றுய்ய வன்புற வீக்கிய வுதரபந் தனமும். (4)

அட்ட வேங்கையீ ருரிவைகீண் டசைத்தகோ வணமும்
ஒட்ட வீக்கிய புலியத ளுடுக்கையு மிடத்தோள்
இட்ட யோகபட் டிகையும்பொன் னிடையிடை கட்டப்
பட்ட சுஃறொலி வேத்திரப் படைக்கையும் படைத்து. (5)

வேத கிண்கிணி சிலம்புசூழ்ந் தடிகளின் மிழற்ற
ஓத ரும்பத முளரியூ றருண்மது வொழுகப்
போத வானந்த மதுநுகர்ந் தலர்முகம் பொலியப்
பாத பங்கய முபநிடப் பாதுகை சூட. (6)

1. சித்தரான படலம். பா.வே.

சிறிது மூரலும் வெயர்வையுந் திருமுகத் தரும்பக்
குறுகி யாவணஞ் சித்திர கூடநாற் சந்தி
மறுகி சூளிகை யுபரிகை மாளிகை வாயில்
அறுகு சூழ்நிரைத் தெற்றியிவ் விடந்தொறு மடைந்து.

தெற்கி ருப்பவர் போல்வட திசைவயிற் சென்று
புக்கி ருப்பதுங் கிழக்குளார் போலமேற் றிசையில்
நக்கி ருப்பதும் யாவரு நாடின ரறியத்
தக்க தன்றியே யிந்திர சாலமாத் தணந்தும். (8)

சேய வெற்பினை யணியதாச் செய்துமற் றணித்தாய்
மேய வெற்பினைச் சேயதா விடுத்துமெய்ம் முதுமூப்
பாய மக்களை யிளையவ ராக்கியுங் குதலை
வாய மக்களைக் கழிமுது மக்களா வகுத்தும். (9)

ஆணைப் பெண்ணுரு வாக்கியும் பெண்ணையா ணுருவா
மாணக் காட்டியு மலடியை மகப்பெறச் செய்துங்
கோணற் கூன்செவி மூமைகண் குருடுபங் கெவருங்
காணத் தீர்த்துநா லுலோகமுங் கனகமாச் செய்தும். (10)

செல்வர் தம்மனைப் பொருளெலாம் வறுமையிற் சிறந்தோர்
இல்ல மெய்தவு நட்டவ ரிகலின்றித் தம்மின்
மல்லு வெஞ்சம ரிழைப்பவுங் காஞ்சிர மரத்தின்
நல்ல தீங்கனி பழுப்பவும் விஞ்சைக ணயந்தும். (11)

பருவ மாறிய பருவத்தில் வைகைநீர் பரந்து
வருவ தாக்கியு மீளவும் வறந்திடச் செய்தும்
பொருவி றீஞ்சுவை யோடையும் பொய்கையு முவர்ப்பத்
தருவ வாக்கியு முவரியின் சுவையதாத் தந்தும். (12)

வீசி மாத்திரைக் கோலினை விண்ணினட் டதன்மேல்
ஊசி நாட்டியிட் டூசிமேற் பெருவிர லூன்றி
ஆசி லாடியு மூசிமேற் றலைகிழக் காக
மாசில் சேவடிப் போதுவான் மலர்ந்திடச் சுழன்றும். (13)

சண்ட வெண்பனிப் பகையெனப் பறந்துவிண் டாவிக்
கொண்ட லைப்பிடித் திடியொடுங் குடித்தநீர் பிழிந்து
கண்ட வர்க்கதி சயம்பெறக் காட்டியுங் காண
விண்ட லத்தினிற் பண்டுபோ னிறைகொள விடுத்தும். (14)

எல்லி டைப்படும் பொருள்களை யிராவெழப் பார்த்தும்
அல்லி டைப்படும் பொருள்களைப் பகல்வர லமைத்தும்
வல்ல ழற்புன லுளர்வளி வலிகெடப் பார்த்தும்
நல்ல போதுகாய் கனியிலா நாள்படக் கண்டும். (15)

பீளை கால்விழிக் கிழவரைப் பிரம்பினால் வருடிக்
காளை யாடவ ராக்கிக் கணவருக் கிசைய
ஈளை வாய்முது கற்பினார் கருவடைந் திளமை
ஆள வேத்திரம் வருடிநீ றளித்தருள் செய்தும். (16)

அகர மாதிமூன் றாகிய வாகரு டணமே
புகரி லாவதி ரிச்சிய மஞ்சனம் பொருவில்
வகர மாதிமூன் றாகிய வசியமே வாதம்
இகலி லாவயத் தம்பமென் றின்னவை செய்தும். (17)

வேத நூறெளி யார்களெக் கலைகளும் விளங்கப்
பூதி நாவினிற் சிதறியும் பூழியன் காதன்
மாத ராரொடும் பயில்புது மணமலர்க் காவிற்
காத நீண்டகோட் டெங்கினைக் கரும்பனை செய்தும். (18)

ஏனை வான்றருக் குலங்களைப் புட்களை யிருகோட்
டானை யாதிபல் விலங்கினை யொன்றையென் றாக
ஞான நோக்கினா னோக்கியு நாடிய விளையோர்
மானி னோக்கிய ராகிலோ மெனவெழில் வாய்த்தும். (19)

நாக நாடுபொன் னாட்டுள பொருளுமந் நகருள்
ஆக வாக்கியு மின்னணம் விச்சைக ளனந்தம்
மாக நாயகன் மலைமக ணாயகன் மதுரை
ஏக நாயகன் றிருவிளை யாடல்செய் திருந்தான். (20)

ஆனாலு மிப்போ தணிகான்மிர நாட்டிற் காசி
தானா மிருக்குந் தலமாகு [1]மநாத ராகி
ஆனாத பிச்சைப் பெரு [2]வாழ் வுடையார் நமரா
நாணாளும் விஞ்சை [3]நடாஅய்த்தரி சித்த ரேம்யாம். (7)

ஆனந்த கானந் தொடுத்திங்குள வான சைவத்
தானம் பலவுந் தொழுதற்பர மாகி வந்தேம்
ஞானந் தருமிந் நகரிம்மையிற் சீவன் முத்தி
மானந் தமான பரமுத்தி மறுமை நல்கும் (8)

ஈண்டுள்ள வர்க்கெம் விளையாடலைக் காட்டி யிச்சை
வேண்டும் பலசித் தியுநல்குவம் வேத மாதி
மாண்டங்கு மெண்ணெண் கலைஞானமும் வல்ல மல்லாற்
சேண்டங்கு மெல்லாப் பொருளும்வல சித்த ரேம்யாம். (9)

உன்னால் நமக்குப் பெறல்வேண்டுவ தொன்று மில்லை
தென்னா வெனவுண் ணகைசெய்தனர் சித்த யோகர்
மன்னா மிவர்தம் மிறுமாப்புஞ் செருக்கும் வீறும்
என்னா வளவிட் டறிவேனென வெண்ணித் தேர்வான். (10)

தேரும் பொழுதோ ருழவன்னொரு செல்வக் கன்னல்
ஆருங் கழுகென்ன வயிர்ப்புறக் கொண்டு தாழப்
பாருந் திசையும் புகழ்பங்கயச் செங்கை தாங்கி
நீரும் பிறையுங் கரந்தார்தமை நேர்ந்து சொல்வான். (11)

வல்லாரில் வல்லே மெனவும்மை மதித்த நீரிக்
கல்லானைக் கிந்தக் கரும்பை யருத்தி னெல்லாம்
வல்லாரு நீரே மதுரைப்பெரு மானு நீரே
அல்லா லெவர்னும் மனம்வேட்ட தளிப்ப னென்றான். (12)

என்னா முகிலைத் தளையிட்டவன் கூறக் கேட்டுத்
தென்னா வருதி யெனப்புன்னகை செய்து சித்தர்

.........................................................................................

1. ஏந்நாடு; நாதராகி. பா.வே. 2. வாழ்வுடையான் நமரா. பா.வே. 3. நடாத்திடுக்

நின்னால் வருவ தெமக்கேது நினக்கு நாமே
உன்னாசை தீரத் தருகின்ற தலாம லுண்டோ. (13)

செல்லா வுலகத் தினுஞ்சென்றொரு விஞ்சை கற்றோர்
பல்லாரு நன்கு மதிக்கப்பய னெய்து வார்கள்
எல்லா மறிந்த வெமக்கொன்றிலு மாசை யில்லை
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி யென்றார். (14)

கடைக்கண் சிறிதே குறித்தார்முன் கடாக்கல் யானை
மடைக்கண் டிறந்து மதமூன்றும் வழிய விண்வாய்
அடைக்கும் படிவாய் திறந்தார்த்துப் புழைக்கை நீட்டித்
தொடைக்குன் றனான்கைச் சுவைத்தண்டைப் பறித்த
தன்றே! (15)

பறித்துக் கடைவாய் வழிசாறளி பாய்ந்து நக்கக்
கறித்துக் குதட்டிப் பருகிக்கர மூச லாட
நெறித்துத் தருக்கி நிழல்சீறி நிமிர்ந்து நிற்ப
மறித்துக் கடைக்கண் குறித்தார்பினு மாயம் வல்லார். (16)

மட்டுற்ற தாரான் கழுத்திற்கண்ட மாலை தன்னை
எட்டிப் பறித்த திகல்காஞ்சுகி மாக்கள் சீறிக்
கிட்டிக் களிற்றைப் புடைப்பான்கிளர் கோல்கொண் டோச்சச்
சிட்டத் தவர்கள் சிவந்தானையைச் சீறி நோக்க. (17)

[1]கண்டா வளியைக் களிறுண்டது கண்கள் [2]சேப்புக்
கொண்டா னரசன் சிவயோகரிற் கோப [3]மூளத்
தண்டா வரசன் றமருட்டறு கண்ணர் சீறி
வண்டா ரிதழி மறைத்தாரை யடிக்க வந்தார். (18)

அப்போ திளமூர லரும்பியச் சித்த சாமி
கைப்போ தமைத்துக் கடிந்தோர்தமை நின்மி னென்ன
மைப்போ தகமன் னவர்வைத்தடி பேர்க்க லாற்றா
தொப்போ தரிய நிலையோவியம் போல நின்றார். (19)

.................................................................................................

1. கண்டா வலியைக். பா.வே. 2. சேப்பக். பா.வே. 3. மீளத். பா.வே.

மத்தக் களிற்றான் வெகுளித்தழன் மாறி யன்பு
பொத்தப் புதைந்த மனத்தற்புதம் பொங்கிச் சோரச்
சித்தப் பெருமா னடிமாமுடி தீண்டப் பாச
பெத்தத் தமியேன் பிழையைப்பொறு மென்று வீழ்ந்தான்.(20)

அன்புக் கிரங்குங் கருணைக்கட லான வையர்
இன்புற்று வேண்டும் வரங்கேளெனத் தாழ்ந்து வேந்தன்
நன்புத் திரப்பே றருள்வாயென நல்கிச் செங்கை
வன்புற்ற வேழ மிசைவைத்தரு ணாட்டம் வைத்தார். (21)

வேறு

தழைக்கு நீள்கதிர்த் தண்முத்த மாலையைப்
[1]புழைக்கை நீட்டிக் கொடுத்தது போதகம்
மழைக்கை நீட்டினன் வாங்கின னீதியிற்
பிழைக்க லாத பெருந்தகை வேந்தனே! (22)

முத்த மாலிகை வாங்குமுன் முன்னின்ற
சித்த சாமி திருவுருக் கண்டிலன்
மத்த யானை வடிவமு மேனைய
ஒத்த தாக வுரவோன் வெருவினான். (23)

இந்த வாட லெமக்குயி ராயவிவ்
வந்த மில்லி யருள்விளை யாட்டெனா
முந்தை வேத முதல்வனை மீளவும்
வந்து வந்தனை செய்தனன் மன்னனே ! (24)

முழுது ணர்ந்த முதல்வநின் னாடலை
இழுதை யேனறி யாதளந் தேனெனா
அழுதி றைஞ்சி யபராத மீந்துகை
தொழுது நின்று துதிக்கத் தொடங்கினான். (25)

1. இது முதலாக யானையெய்த படலத்து 4வது செய்யுள் வரை சுவடியில் இல்லை அச்சுநூல் கொண்டு நிறைவு செய்யப்பட்டது.

வேறு

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே. (26)

நின்னான் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னா ளருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னாமம் வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னா [1]லடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே. (27)

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறயதுமாய்
அரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்ச்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடநத
துரியமுமாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே. (28)

வேறு

என்றுபல முறைபழிச்சி மனையெய்தி
விக்ரமனை யீன்று பன்னாட்
டொன்றுமுறை கோலோச்சி விக்கிரமன்
சுவன்மிசைப்பார் சுமத்திப் பாசம்
வென்றுகளைந் தருட்சித்த சாமிதிரு
வருணோக்கால் விளைபே ரின்ப
[2]மன்றன்மது வீழ்வண்டிற் கலந்திருந்தா
னபிடேக மாறன் மன்னோ. (29)

இருபத்தொன்றாவது
கல்லானைக்குக் கரும்பருத்திய படலம் முற்றும்
ஆகத் திருவிருத்தம் 1383.

..............................................................

1. லடியேனென்; லடியேன்யான் பா.பே. 2. றன்மது. பா.பே.

இருபத்திரண்டாவது

## யானை யெய்த படலம்

கட்டவிழ் கடுக்கையர் கலானைகழை தின்ன
இட்டதிது பஞ்சவ னிடத்தமண ரேவி
விட்டமத யானைவிழ மேவலர் புரத்தைச்
சுட்டகணை விட்டுயிர் தொலைத்தமுறை சொல்வாம். (1)

விக்கிரம பாண்டியன் வெலற்கரிய செங்கோல்
திக்குநில னுந்திறைகொள் செல்வநிறை வெய்த
அக்கிரம வெங்கலி யரும்பகை யொதுங்கச்
சக்கர முருட்டியிடர் சாய்த்துமுறை செய்வான். (2)

புத்தரம [1]ணாதிய புறக்களை யகழ்ந்து
நித்தமறை யாகம நெறிப்பயிர் வளர்த்து
மெய்த்தவிதி பத்தியின் விளைந்தபயன் யாருந்
துய்த்திட மனுத்தொழி னடத்திவரு தூயோன். (3)

மருவிதழி யானுறையும் வானிழி விமானத்
தருகுவட பக்கமுற வாலய மெழுப்பி
உருவரு விரண்டினையு மொருவிவரு சித்தர்
திருவுருவு கண்டுபணி [2]செய்தொழுகு நாளில் (4)

செய்யகதி ரோன்வழிய செம்பிய னொருத்தன்
கையனவன் வென்றிபயில் காஞ்சிநக ருள்ளான்
பொய்யமணர் கட்டுரை புறத்துறையி னின்றான்
மையின்மதி மாறனொடு மாறபட நின்றான். (5)

முடங்கன்மதி செஞ்சடை முடித்துவிடை யேறும்
விடங்கரது சேவடி விழுங்கிய மனத்து
மடங்கனிகர் தென்னனெதிர் வந்துபொர லாற்றா
தடங்கலனொார் வஞ்சனையி னாலட மதித்தான். (6)

1. ணாதியர். பா.வே. 2. செய்துவரு

வேறு

அஞ்சனாங் கவுஞ்சங் கோவர்த்
　　　　தனந்திரி கூடங் [1]காஞ்சிக்
குஞ்சரஞ் சைய மேம
　　　　கூடமே விந்த மென்னும்
மஞ்சிவர் வரைக ளெட்டும்
　　　　வைகுறு மமணர் தம்மில்
எஞ்சலில் குரவர்க் கோலை
　　　　வேறுவே றெழுதி விட்டான். (7)

வடிவுபோ லுள்ள மெல்லா
　　　　மாசிருள் புதைய நின்ற
அடிகண்மா ராவா ரெண்ணா
　　　　யிரவரு மார்த்தார் வேய்ந்த
முடிகெழு வேந்தன் விட்ட
　　　　முடங்கலை நிமிர்த்து வாசித்
திடிகெழு கார்போற் குன்றி
　　　　னிழிந்துவே றிடத்திற் செல்வார். (8)

யாவரு மொருங்கு கூடி
　　　　யிருள்வழி கொள்வ தேய்ப்பக்
காவல்வல் லரணஞ் சூழ்ந்த
　　　　காஞ்சிமா நகரத் தெய்திப்
பூவலர் தாரான் கோயிற்
　　　　புறங்கடை புகுந்து வேந்தன்
ஏவலர் விடுப்ப வுள்போ
　　　　யிறைமக னிருக்கை புக்கார். (9)

மன்னவன் முடிமேற் பீலி
　　　　வைத்தன ராக்கங் [2]கூற
அன்னவ னவரை நோக்கி
　　　　வசியமுன் னாறும் வல்லீர்

1. காஞ்சி குஞ்சர சைய. பா.வே. 2. கூறி. பா.வே.

தென்னனை யாபி [1]சாரஞ்
செய்துயிர் செகுத்தா லுங்கட்
கென்னது நாடு பாதி
தருவல்போ யியற்று மென்றான். (10)

## வேள்விக்குண்டம் செய்தது

தவம்புரி தவமே செய்வார்
தாமதற் குடன்பட் டேகி
நிவந்ததென் டிரைநீர்ப் பாலி
நெடுங்கரைக் காத மூன்றிற்
கவர்ந்தகன் சாலை கோலி
யோசனை யகலங் கல்லி
அவம்படு வேள்விக் குண்டங்
கோணமெட் டாகக் கண்டார். (11)

விடம்பொதி காட்டம் பெய்து
நிம்பநெய் விராய நஞ்சின்
உடம்புடை யுயிரின் கோமூன்
கறிப்பொடி யூறு மெண்ணெய்
இடம்பட வாயங் காந்த
வெரிக்குழி புதையப் பெய்து
கொடும்பழி வேள்வி செய்தார்
கொல்லாத விரதம் பூண்டார். (12)

மாடுள பொதும்பர் நந்தா
வனமுள கோலை யுள்ள
காடுள கருகிச் சாயக்
கயலுள வோடை யுள்ள
கோடுள வாவி யுள்ள
குளமுள வறப்பத் தாவிச்
சேடுள முகிலுந் தீயச்
சிகையெழு குண்டத் தீவாய். (13)

---

1. சுவடியில் இது முதல் 11ஆம் பாடல் தவமே செய்வார் வரை இல்லை.

கூற்றெழு தோற்றம் போல
வஞ்சனக் குன்றம் போலக்
காற்றெழு செவியு நால்வாய்
கௌவிய மருப்பு மாறா
ஊற்றெழு மதமு மூச
லாடிய வொற்றைக் கையும்
ஏற்றெழு விடம்போற் சீறி
யெழுந்ததோர் தறுகண் யானை. (14)

அந்தமா வேள்வித் தீயு
மவியமும் மதமுஞ் சோர
வந்தமா களிற்றை நீபோய்
வழுதியை மதுரை யோடுஞ்
சிந்தவே தொலைத்தி யென்னாத்
தென்றிசைச் செல்ல வேவி
முந்தவே விடுத்த மாசு
மூழ்குட லமணப் பேய்கள். (15)

வேறு

அருளற்றிரு ளுடலிற்புதை யமணக்கய வர்களுட்
டெருளற்றரு மறையிற்படர் செயலற்றிக பரமெய்ப்
பொருளற்றவ னனிகத்தொடு புறமொயத்திட மதமா
வெருளற்றிடி குரலிற்படி வெடிபட்டிட வருமால். (16)

அடியின்னள வகல்பாதல முடியின்னள வண்டம்
இடியின்னள வெழுகார்செவி யெறிகாலள வகிலம்
மடியும்மள வுளர்கான்மத மழையின்னள வுலக
முடிவின்னெழு கடல்கண்ணழ லளவாமுது வடவை. (17)

[1]கூற்றஞ்சிய வருமிக்கரி குரலஞ்செவி முழைவாய்
ஏற்றஞ்செய மடங்குஞ்செவி யெறிகால்வழி விழித்தீ
ஊற்றஞ்செய மடைவாயுடைந் தொழுகுங்கட மதநீர்
நாற்றஞ்செயத் திசைவேழமு நடுக்கஞ்செய்து நலியும். (18)

.........................................................

1. கூற்றஞ்சிட. பா.வே.

இடிக்கும்புயல் வயிற்றைக்கிழித் திடியேற்றினை யுதிர்க்கும்
வெடிக்கும்பிளி றொலியாற்றிசை விழுங்கிச்செவி டாக்குந்
துடிக்கும்புழைக் கையோச்சிவிண் டொடுகுன்றினைச் சுற்றிப்
பிடிக்குங்கடல் கலக்குந்தனிப் பெருமத்தெனத் திரிக்கும். (19)

உருமுக்குர லொலியிற்றுள றொலிவிட்டெறி செவியிற்
றிருமுட்பிறை யெயிறிற்றழ [1]லெரிகட்டிரு ளுடலிற்
றருமுக்கட பெருவித்துர லடியிற்றென நிலமேல்
வருமுக்கிர வடவைக்கனல் வரினொப்பத மதமா. (20)

[2]தெழிபட்டதிக் கயத்தின்செவி தீயப்பகை யோடும்
வழிபட்டொரு கடுங்கூற்றென வருகுஞ்சர வரவை
[3]விழிபட்டவர் மொழியாலுணர் விரைபட்டலர் வேம்பன்
[4]சுழிபட்டலை புனல்போன்மனஞ் சுழன்றானினைந் தழன்றான். (21)

மைப்போதகம் பொறையாற்றிய மணிக்கோயின்முன் குறுகாக்
கைப்போதக முரித்தான்கழற் காற்போதக முறத்தாழ்ந்
திப்போதகந் தனையுந்தொலைத் தெனைக்காத்தியென் றிரந்தான்
அப்போதகல் வானின்றொரு திருவாக்கெழுந் தன்றே. (22)

விட்டார்வலி கெடநாமொரு விற்சேவக னாகி
ஒட்டார்விட வருவெங்கரி யுயிர்வெளவுது முதனின்
மட்டார்பொழிற் கடிமாநக ரயற்கீட்டிசை மருங்கோர்
அட்டாலைமண் டபஞ்செய்யென வதுகேட்டெழுந் தரசன். (23)

அகங்கவ்விய களிப்பெய்திவந் தட்டாலைமண் டபம்பொன்
நகங்கவ்விய தெனத்தூணொரு நானான்கினி லெடுத்தே
சகங்கவ்விய புகழான்செயத் தறுகட்டகணை மதமா
முகங்கவ்விய விற்சேவகன் வருவானது மொழிவான். (24)

வேறு

நீனிற நீத்த நீந்து
நிழன்மதி யிரண்டுண் டென்ன

1. லெறிகட்டிரு. பா.வே. 2. தெழிப்பட்ட 3. விழிப்பட்ட பா.வே. 4. சுழிப்பட்டலை. பா.வே.

வானிற வலயச் சங்க
　　வார்குழை நுழைவித் தம்பூம்
பானிற வெகினங் காணாப்
　　படர்சடை மறைத்துத் தோன்றுங்
கானிறை குஞ்சிச் சூட்டிற்
　　களிமயிற் கலாபஞ் சூடி. (25)

கருங்கடன் முளைத்த செக்கர்க்
　　கதிரெனக் குருதிக் கச்சை
மருங்குற வீக்கிச் சோரி
　　வாயுடை வாளுங் கட்டி
இரங்குநான் மறைக ளேங்க
　　விருநிலந் தீண்டு நாளிற்
பொருங்கழல் வளைத்து வாளிப்
　　புட்டிலும் புறத்து வீக்கி. (26)

வீங்கிய தடந்தோ ளிட்ட
　　வார்சிலை வில்லி னோடும்
பாங்குறை யிமயப் பாவை
　　பாதியே யன்றி முற்றும்
வாங்கிய வண்ணம் போன்று
　　மல்லது மாலு மோர்பால்
ஓங்கிய வண்ணம் போன்று
　　மொளிநிறம் பசந்து [1]தோன்ற. (27)

காமனுங் காமுற் றஞ்சுங்
　　காளையாம் பருவந் தோன்றத்
தாமுல களந்த வென்றித்
　　தனிவிற்சே வகனாய்த் தோன்றி
மாமறை மகுட மன்ன
　　மண்டபத் தேறித் தென்னர்
கோமக னிடுக்கண் டீர்ப்பான்
　　குஞ்சர வரவு நோக்கா. (28)

........................................

1. தோன்றி. பா.வே

அஞ்சுகூ விளிச்சேய்த் தென்ன
வதுவர வறனி லாதான்
வெஞ்சினக் கோலி னோன்றாண்
மதித்துமெய் குழைய வாங்கிச்
செஞ்சிலை நெடுநாண் பூட்டித்
திருவிர றெறித்துத் தாக்கிக்
குஞ்சர மெட்டு மஞ்சக்
கோளரி முழக்கக் காட்டி. (29)

இங்கித நெடுங்கோ தண்ட
மிடங்கையி லெடுத்து நார
சிங்கவெங் கணைதொட் டாகந்
திருகமுன் னிடத்தாள் செல்ல
அங்குலி யிரண்டா லையன்
செவியுற வலித்து விட்டான்
மங்குலின் முழங்கும் வேழ
மத்தகங் கிழிந்த தன்றே. (30)

கொண்டலி னலறிச் சீறி
வீழ்ந்தது கொடிய வேழம்
பிண்டது பாருஞ் சேடன்
சென்னியும் பிளந்த தண்டம்
விண்டது போலு மென்னத்
துண்ணென வெருவிப் போன
பண்டைய தருக்கும் வீறும்
படைத்தன திசைமால் யானை. (31)

புதைபடக் கரித்தோல் போர்த்த
புண்ணிய மூர்த்தி தாளால்
உதைபடக் கிடந்த கூற்ற
மொத்தது மத்த யானை
கதைபடு மதிக்கோ வேந்தன்
றொழுகுலச் சிறுவ னொத்தான்
பதைபடு மமணர் கால
படரெனப் படரிற் பட்டார். (32)

இருள்கிடந் தனைய தானை
யிட்டசிந் துரங்கார் மாலை
இருண்முகத் தொதுங்கிச் செல்லு
மிரவிசெங் கிரணம் போன்ற
திருண்முழு துண்ணக் காலை
யெழுகதிர் வட்ட மன்ன
திருளினை மறைத்த கண்ட
னெய்த[1]வாய் பெய்யுஞ் செந்நீர். (33)

பொய்யறா மனத்தார் தேற்றும்
புன்னெறி யொழுக்கம் பூண்ட
வெய்யகோன் கொடுங்கோ றன்னை
வெண்மருப் பாகத் தாங்கி
மையன்மா வடிவங் கொண்டு
வந்தவெங் கலியைத் தென்னன்
செய்யகோ லையன் சிங்க
வாளியாய்ச் சிதைத்த தன்றே. (34)

உருமுவீழ்ப் புண்ட குன்றி
னும்பன்[2]மா னம்பு தொட்ட
பெருமுழை வாயும் வாயும்
பெருகின வருவிச் சோரி
கருமுகின் மானச் சேனங்
கழுதுகள் பூத மொய்த்த
திருமணித் தடந்தோள் [3]வீங்கத்
தென்னவ னுவகை பூத்தான். (35)

ஆனையின் புண்ணீ ருண்ண
வடுத்தகா ருடற்பே யென்னச்
சேனைபின் செல்லப் போந்த
திணியிரு ளமணர் தம்மை

வாய்ப்பெய்யுக். பா.வே. 2. மாவம்பு; மாலம்பு. பா.வே. (மாலம்பு - நரசிங்காத்திரம்)
வீங்கித். பா.வே.

மீனவன் கண்டு சீற
வேந்தவன் குறிப்பி னிற்கும்
மானவெஞ் சினவேன் மள்ளர்
வல்லைபோய் முடுக்க லுற்றார். (36)

எடுத்தனர் கையிற் றண்ட
மெறிந்தனர் மறிந்து சூழ்போய்த்
தடுத்தனர் கரகந் தூளாத்
தகர்த்தனர் பீலி யோடுந்
தொடுத்தன ருடுத்த பாயைத்
துணிபடக் கிழித்துக் கால்வாய்
விடுத்தனர் மானம் போக்கி
விட்டனர் சில்லோர் தம்மை. (37)

எறியுண்டு செய்த மாய
மிழப்புண்டு சேனை யோடு
முறியுண்டு நடுக்கம் பாவ
மூழ்குண்டு மாழ்கிச் சாம்பிப்
பறியுண்ட தலையர் யாரும்
பழிப்புண்டு பாயுந் தாமும்
உறியுண்ட கரகத் தோடு
மொதுங்குண்டு பதுங்கிப் போனார். (38)

மாதங்கந் தடிந்தட் டாலை
மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப்
பாண்டிய னிரந்து வேண்டிப்
போதங்கள் கடந்தா யென்றும்
பொலியவிங் கிருத்தி யென்ன
வேதங்கட் கருத்தஞ் சொன்ன
வேதிய னதற்கு நேர்ந்தான். (39)

பின்னுஞ்சில் வரங்க ணல்கப்
பெற்றுநான் மாடக் கூடல்

மன்னுஞ்சின் மயனை வந்து
வந்தித்து வருநாட் காமன்
என்னுஞ்சின் மலர்ப்பூந் தண்டா
ரிராசசே கரனைப் பெற்று
மின்னுஞ்சில் லியந்தேர் வேந்தன்
மேதினி புரக்கு மன்னோ. (40)

வம்புளாய் மலர்ந்த வாரான்
வரவிடு மத்தக் குன்றிற்
சிம்புளாய் வடிவங் கொண்ட
சேவக னேவல் செய்த
அம்புளாய்த் தூணம் விள்ள
வன்றவ தரித்த வாபோற்
[1]செம்புளாய்க் கொடிய நார
சிங்கமா யிருந்த தன்றே. (41)

உலகெலா மழித்து மீளவுண் டாக்கு
முருத்திரன் வீரசத் தியினிற்
சிலதரித் திரவா வவுணன்மார் பிடந்த
சிங்கநா யகனையங் கெய்தி
அலகின்மா தவஞ்செய் துரோமசன் றன்பே
ரறியவோர் தீர்த்தமுண் டாக்கி
இலகுபே றடைந்தான் பிரகலா தனுநோற்
றீறிலாப் பெருவர மடைந்தான். (42)

இருபத்திரண்டாவது யானையெய்த படலம் முற்றும்
ஆகத் திருவிருத்தம் 1425.

1. செம்புளாய் கொடிய (செம்புள் - கருடன் ; ஆய் - தியானிக்கின்ற ; கொடிய - உக்கிரமுள்ள).
பா.வே.

இருபத்து மூன்றாவது

## விருத்த குமார பாலரான படலம்

தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமேல்
அழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே
கிழவ னாகிப்பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய்க்
குழவி யாய்விளை யாடிய கொள்கையைப் பகர்வாம். (1)

தென்னன் விக்கிர மன்புயத் திருநிலச் செல்வி
மன்னி வாழுநாண் மதுரையின் மறையவ றொருவன்
அன்ன வன்விரு பாக்கனா மவன்குடி வாழ்க்கை
மின்ன னாள்வட மீனனாள் பெயர்சுப விரதை. (2)

அனையர் தங்களுக் கரும்பெறன் மகவின்றி யநந்தம்
புனித நல்லறஞ் செய்தொழி லொழுக்கமும் பூண்டு
நனைய வார்குழ லன்னைய ரெழுவர்பா னண்ணி
இனிய மாதவஞ் செய்தொரு பெண்மக வீன்றார். (3)

பேருங் கௌரியென் றழைத்தனர் பிராயமோ ரைந்திற்
சாருங் கௌரியும் பிறவிநோய் தணிப்பதற் குறுதி
தேருஞ் சிந்தையா டந்தையை வணங்கியிச் செனனம்
ஈருந் தெய்வத மந்திர மியாதென வினவ. (4)

அந்த ணாளனு மதிசயித் தரும்பெறன் மகட்குச்
சிந்தை யார்வமோ டிறைவிதன் மனுவினைச் செப்பத்
தந்தை பாலது தெளிந்துநாத் தழும்புறப் பயின்றாள்
முந்தை நாளருந் தவக்குறை முடித்திட வந்தாள். (5)

தாதை தன்றவக் கொழுந்தினுக் கிசையமா சைவ
மாத வத்தனா யாதியாச் சிரமத்தில் வழங்கும்
வேத வித்துமாய் மரபினான் மேம்படு வானெப்
போது போதுமென் றுளத்தொடு புகன்றுகொண் டிருந்தான் (6)

பருவ நாலிரண் டாகமேற் கடிமணப் பருவம்
வருவ தாகவங் கொருபகல் வைணவப் படிவப்
பிரம சாரியாய்க் கடைதொறும் பிச்சைபுக் குண்பான்
ஒருவன் வந்தனன் பலிக்கவ [1]ணயற்புலத் துள்ளான். (7)

பிச்சை வேண்டினா னவற்குத்தன் பெண்ணினைக்
கொடுப்பான்
இச்சை கூர்ந்தருந் தவத்தினால் வருந்தியீன் றெடுத்த
விச்சை வேதியன் மனையொடு சுற்றமும் வினவா
தச்ச மின்றிநீ ரெடுத்தவ னங்கையிற் பெய்தான். (8)

கலிக்கு நூபுரச் சீறடிக் கன்னிதன் விதியும்
பலிக்கு வந்தவ னல்வினைப் குதியுந் துரப்ப
ஒலிக்கு மந்திரச் சிரகநீ ரொழுக்கினான் [2]முந்திச்
சலிக்கு மன்னையுந் தமர்களுங் கேட்டுளந் தளர்வார். (9)

குலனு மோர்கிலன் கோத்திர மோர்கிலன் குடிமை
நலனு மோர்கில னொழுக்கமுங் கல்வியு நண்ணுந்
தலனு மோர்கிலன் கன்னியைத் தத்தஞ்செய் தானெனப்
புலனு மோர்ந்தவன் விதிவழி மதியெனப் புலந்தார். (10)

மற்ற வன்குடி கோத்திரஞ் சூத்திர மற்றும்
உற்ற றிந்துநம் மரபினுக் கொக்குமான் மாயோன்
சொற்ற தந்திர வைணவத் தொடக்குண்டு
குற்ற மென்றினி மறுப்பதென் கொடுப்பதென் றிசைந்தார்.(11)

தாயு மொக்கலு மொத்தபின் றாதையும் வேதத்
தாயு மெண்மணத் தாதியா மறநிலை யாற்றாற்
றேயு நுண்ணிடைக் கன்னியைச் செம்பொனாற் புதைத்துக்
காயு மாரழன் முன்னரக் காளைகைக் கொடுத்தான். (12)

தெய்வ மங்கல வரிசைகள் செய்துதான் பயந்த
மெளவ லங்குழற் கன்னியை மணமக னோடுங்

.................................................................

1. ணயுற்புலத் .பா.வே. 2. முந்தச் . பா.வே.

கௌவை யம்புனல் வேலிசூழ் கடிநகர் விடுத்தான்
சைவ மங்கல வேதியத் தாபத னிப்பால். (13)

வேறு

இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டா
லெனப்பல்லா ரில்லந் தோறுஞ்
செல்லாநின் றிரந்துண்டு திரிந்தமகன்
மணமகனாய்ச் செல்வ நல்க
வல்லாளை மணந்துவரு வான்போற்றம்
மனைபுகுத வன்கட் சீலப்
பொல்லாராய் வைணவத்துப் புக்கொழுகு
தாய்தந்தை பொறார்க ளாகி. (14)

வந்தமண வாட்டிசிவ சிந்தனையுஞ்
சைவதவ வடிவு நோக்கி
வெந்தவுடல் போன்மனமும் வெந்தவளை
வேறொதுக்கி வேண்டா ராகி
நித்தனைசெய் தொழுகுவா ரவளையொரு
நாணீத்து நீங்கி வேலூர்த்
தந்தமர்மங் கலங்[1]காண்பார் தனியேவைத்
தகம்பூட்டித் தாங்கள் போனார். (15)

உண்மாசு கழுவுவது நீறென்றே
யுபநிடத முரப்பக் கேட்டும்
மண்மாசு படப்பூசும் வடிவுடையா
ரகன்றதற்பின் மனையில் வைகும்
வெண்மாசு கழியவொரு சிவனடியார்
தமைக்காணப் பெறாம லின்றென்
கண்மாசு படுவதெனக் கனிதொழுகுந்
தலையன்பாற் கவலை கூர்வாள். (16)

சிவனடியார்க் கன்பிலாச் சிந்தையே
யிரும்பேவல் செய்து நாளும்

1. காண்பான்

அவனடியார் திறத்தொழுகா வாக்கையே
மரஞ்செவிகண் ணாதி யைந்தும்
பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே
பாவைமறை பரவுஞ் சைவ
தவபநெறியல் லாநெறியே பவநெறியென்
றளியளாய்த் தளர்வாள் பின்னும். (17)

எனைத்துயிர்க்கு முறுதியிக பரமென்ப
வவைகொடுப்பா னெல்லாந் தானாய்
அனைத்துயிர்க்கு முயிராகு மானென்ப
வவனறிவார்க் கங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப
வப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப
தவனடியார் வேட மன்றோ. (18)

என்னவிருந் தலமருவா ளிருக்குமிடத்
தவளுள்ளத் தெண்ணி யாங்கே
தென்னவனா யிருந்தரசு செய்தபிரா
னவட்கருளுஞ் செவ்வி நோக்கிக்
கன்னமுரங் கரஞ்சிரந்தோள் கண்டமுங்கண்
டிகைபூண்டு கையிற் றம்போற்
பன்னெடுநாட் பழகியதோர் தனிப்பெரிய
புத்தகமும் பக்கஞ் சேர்த்தி. (19)

கரிந்தநீள் கயன்முள்ளி னரையுமுது
திரைகவுளுங் கனைக்கு நெஞ்சுஞ்
சரிந்தகோ வணவுடையுந் தலைப்பனிப்பு
முத்தரியந் தாங்கு தோளும்
புரிந்தநூல் கிடந்தலையும் புண்ணியநீ
றணிமார்பும் பொலிய நீழல்
விரிந்ததோர் தனிக்குடையுந் தண்டூன்றிக்
கவிழ்ந்தசையு மெய்யுந் தாங்கி. (20)

ஒருத்தரா யுண்டிபல பகல்சுழிந்த
பசியினர்போ லுயங்கி வாடி
விருத்தவே தியராய்வந் தகம்புகுதக்
கண்டெழுந்து மீதூ ரன்பின்
கருத்தளாய்த் தவிசிருத்திக் கைதொழுது
சிவனையிங்குக் காண வென்ன
வருத்தமா தவமுடையே னெனமுனிவர்
பசித்துன்பால் விந்தே மென்றார். (21)

இற்பூட்டிப் போயினா ரெமரங்க
ளெனக்கெளரி யியம்ப மேரு
விற்பூட்டிப் புரம்பொடித்த வேதியர்நின்
கைதொட்டு விடுமுன் யாத்த
கொற்பூட்டு விடுந்திறந்து கடிதடிசில்
சமைத்தியெனக் குமரி தாளில்
அற்பூட்டு மடவரலு மவ்வாறே
யட்டில்புகுந் தடிசி லாக்கி. (22)

தையன்மா தவக்கொழுந்து புறம்போந்து
சிரகநீர் தளிர்க்கை தாங்கி
ஐயனே யமுதுசெய வெழுந்தருளு
மெனவெழுந்த வடிகள் பாதச்
செய்யதா மரைவிளக்கி யந்நீர்தன்
சென்னியின்மேற் றெளித்துப் பாச
மையன்மா சிருள்கழுவி யகம்புகுவித்
தாசனமேல் வைத்துப் பின்னர். (23)

நகைமலரிட் டருச்சித்து நல்லபரி
கலந்திருத்தி நறுவீ முல்லை
முகையனைய பாலடிசில் வெள்ளிமலை
யெனப்பருப்பு முதுகிற் செம்பொற்
சிகரமெனப் பல்வேறு கருணைபுறந்
தழீஇக்கிடந்த சிறுகுன் றீட்ட
வகையெனநெய் யருவியெனப் படைத்தனைய
சிற்றுண்டி வகையும் பெய்து. (24)

செய்யவா யிடையிடையே முகமனுரை
யின்னமுது செவியி லூட்டத்
தையலாள் வளைக்கையறு சுவையமுது
வாயூட்டத் தளர்ந்து யாக்கை
ஐயர்தாந் திருவமுது செய்தமுதுண்
டவரெனமூப் பகன்று பூவிற்
கையதே மலர்வாளிக் காளைவடி
வாயிருந்தார் கன்னி காண. (25)

பூசியவெண் ணீறுபோய்க் கலவையாய்க்
கண்டிகைபோய்ப் பொன்செய் பூணுங்
காசணிபொற் குண்டலமும் கடகமுமாய்
மூப்புப் போய்க் காளை யான
தேசுருவங் கண்டுநடு நடுங்கிவளைக்
கரநெரித்துத் திகைத்து வேர்த்துக்
கூசியொரு புறத்தொதுங்கி நின்றாளக்
கற்புமலர்க் கொம்ப ரன்னாள். (26)

ஆனபொழு தருங்கடிநன் மணங்குறித்து
மனையிற்றீர்ந் தயலூர் புக்க
தேனொழுகு துழாயலங்கற் றீர்த்தனுக்கன்
புடையார்போற் றிரியும் வஞ்ச
மானமுடை யார்மீண்டு மனைபுகலும்
பதினாறு வயதின் மேய
பானன்மணி கண்டனுதற் காப்பணிந்தோர்
பசுங்குழவிப் படிவங் கொண்டான். (27)

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத்
தலம்பவன்ப ரிதய மென்னுஞ்
செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத்
தேன்றதும்பு தெய்வக் கஞ்சத்
தொழுதகுசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து
மைக்கணீர் துளும்ப வாய்விட்
டழுதலையா டையிற்கிடந்தா னனைத்துயிரு
மீன்றுகாத் தழிக்கு மப்பன். (28)

தாய்விட்டுப் போனதொரு தனிக்குழவி
யெனக்கலங்கித் தாங்கித் தேடி
ஆய்விட்டுப் பிரமனழ மறைகளழ
வன்புடையா ளன்பிற் பட்டு
வாய்விட்டுக் கிடந்தழுத மகவினைக்கண்
டணங்கனையாண் மாமி யென்னுங்
காய்விட்டு மதக்கொடியா ளிம்மகவே
தெனக்கேட்டாள் கௌரி தன்னை. (29)

நத்தனயன் றனக்கரிய நாயகனுக்
கன்புடையா ணவில்வா டேவ
தத்தனயந் தருமனைவி யொடுபோந்து
சிறுபோது தைய லாயீண்
டித்தனயன் றனைப்பார்த்துக் கோடியென
வைத்தகன்றா னென்னா முன்னஞ்
சித்தநய னங்கலங்கச் சீறிமண
வாட்டிதன்மேற் செற்றங் கொண்டாள். (30)

என்புபூண் டிடுகாட்டிற் பொடியாடு
முருத்திரனுக் கிடைய றாத
அன்புபூண் டான்மகவுக் கன்புடையாய்
நீயுமெமக் காகா யென்னாத்
துன்புபூண் டயர்வாளை மகவையுங்கொண்
டகத்தைவிடத் துரத்தி னார்கள்
வன்புபூண் டொழுகுவை ணவம்பூண்டு
பொறையிரக்க மான நீத்தார். (31)

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித்
தெருவினிடைத் தளர்வா ளுள்ளங்
கோயிலாக் கொண்டுறையுங் கூடனா
யகனைமனக் குறிப்பிற் கண்டு
வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு
மந்திரத்தை விளம்ப லோடுஞ்
சேயிலாய்க் கிடந்தழுத குழவிவிசும்
பிடைவிடைமேற் றெரியக் கண்டாள். (32)

மழவுருநீத் தடலேற்றின் வருவார்தம்
மிடத்தணங்கின் மனுவை யோதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின்
வடிவாக்கிப் பலருங் கண்டு
தொழவிடைமே லெற்றிவிசும் பாறாக
மலர்மாரி சுரர்க ருேற்ற
அழகரெழுந் தருளினார் களிதூங்கி
யதிசயித்தா ரவனி மாக்கள். (33)

இருபத்து மூன்றாவது
விருத்த குமார பாலரான படலம் முற்றும்
ஆகத் திருவிருத்தம் 1458



### இருபத்து நான்காவது
## கான்மாறியாடின படலம்

திருத்த ராய்மது ராபுரி மேவிய
சித்தரா கியசெல்வர்
விருத்த ராயிளை யவருமாய் மழவுமாய்
வேடங்கொண் டடலேற்றின்
ஒருத்த ராய்விளை யாடிய வாடலை
யுரைத்தன மினிமன்றுள்
நிருத்த ராயவர் மாறிநின் றாடிய
நிலைசிறி துரைசெய்வாம். (1)

வேந்தன் 1மீனவன் கொடியவ னாகிய
விக்கிர மன்றன்றோன்
ஏந்து மண்பொறை யிராசசே கரன்புயத்
திறக்கியைந் தருநாடன்
பூந்தண் மாமலர் வேதியன் மாதவன்
புரத்தின்மேற் பொலிந்தோங்குஞ்
சாந்த நீறெனச் சண்ணித்த புண்ணியத்
தனிமுத னகர்சார்ந்தான். (2)

கண்ண கன்புவி யிராசசே கரன்பொதுக்
கடிந்துசெங் கோலோச்சி
வண்ண வெண்குடை நிழற்றுவ னானந்த
வடிவமாய்த் தனிமன்றுள்
அண்ண லாயடி திருநடத் தன்பினா
லாடனூ லொழித்தேனை
2எண்ணி மூவிரு பத்துமுக் கலையுங்கற்
றிறைமுறை செயுநாளில். (3)

1. மீனவன். பா.வே.2. எண்ணு. பா.வே. ❖ சுவடியில் மாறியாடின படலம் என்றே உளது.

சிலம்பி வாயினூ லிழைத்திடு பந்தரிற்
செங்கண்மா றொழவைகும்
அலம்பு தெண்டிரைப் பொன்னியந் தண்டுறை
யானைக்கா விறைக்கன்பு
கலந்த சிந்தையான் மூவிரு பத்துநாற்
கலைகளும் பயின்றுள்ளம்
மலர்ந்த வன்கரி காற்பெரு வளத்தவன்
வையகம் புரக்கின்றான். (4)

பொன்னி நாடவன் வாயிலுள் ளானொரு
புலவன்வந் தலர்வேம்பின்
கன்னி நாடனைக் கண்டுமுன் பரவுவான்
கனைகழற் கரிகாலெம்
மன்ன வற்கறு பத்துநாற் கலைகளும்
வரும்வரா துனக்கொன்று
தென்ன ரேறனை யாயது பரதநூ
றெரிந்திலையெனச் சொன்னான். (5)

கேட்ட மீனவன் மறுபுல விஞ்சையன்
கிளத்துசொல் லிகன்மானம்
மூட்ட வாகுல மூழ்கிய மனத்தனாய்
முதுமறைச் சிரமன்றுள்
நாட்ட மூன்றுடை நாயக னாடலை
நானுமா டுதற்குள்ளம்
வேட்ட தேகொலா மிதுவுமெம் பிரானருள்
விதியென வதுகற்பான். (6)

வேறு

ஆடனூல் வரம்பு கண்டவ ராகி
யவ்வழி யாடலும் பயின்ற
நாடக நடைதேர் புலவரைத் துருவி
நண்ணிய வவர்க்கெலா மகிழ்ச்சி
வீடருஞ் சிறப்பா லுறுவையும் பூணும்
வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்துப்
பாடல்வண் டரற்றுந் தாரினான் பரதப்
பனுவலுங் கசடறப் பயில்வான். (7)

பாவமோ டராகந் தாளமிம் மூன்றும்
பகர்ந்திடு முறையினான் பரதம்
ஆவயி னங்க முபாங்கமே பிரத்தி
யாங்கமே யலர்முக ராகம்
ஓவறு சீர்சால் கரப்பிர சார
முவமையில் சிரக்கர கருமந்
தாவறு கரகேத் திரங்கர கரணந்
தானக மேசுத்த சாரி. (8)

விண்டிடாத் தேசி சாரியே நியாயம்
விருத்தியே பிரவிசா ரம்பூ
மண்டல முடனா காசமண் டலமே
மாசில்சுத் தக்கர ணஞ்சீர்
கண்டவுற் புலித கரணமே யங்க
காரமே யிரேசித மென்னக்
கொண்டநா லைந்து பேதமுங் கற்றுக்
கோதறப் பயின்றபி னவற்றுள். (9)

வருத்தமின் மனோபா வாதியா மெட்டு
வகைநிருத் தங்களிற் சாரி
நித்தமா கியதாண் டவமக மார்க்க
நிகழ்த்திடுந் தேசியே வடுகே
அருத்தமா கியசிங் களமென மூன்றா
மதுநிலை யாறுமூ விரண்டு
திருத்தமாம் பதமுந் திகழிரே காதி
செப்பிய வங்கமீ ரெட்டும். (10)

நால்வகைத் தாகுங் கரணமு மேலோர்
நாட்டிய விருவகைக் கரமுங்
கால்வகை புரிகை முதற்பதி னாறுங்
கவான்மனை யாதியா [1]மிரண்டும்
பாலது மடிப்பு வகையெழு நான்கும்
பழிப்பறு சுத்தசா ரியெனும்

1. மிரண்டு. பா.வே.

ஏலுறு பூசா ரிகள்பதி னாறு
மித்துணைக் ககனசா ரிகளும். (11)

ஏற்றதிக் கிராந்த மாதியா முப்பத்
திருவகைத் தேசிசா ரிகளுங்
காற்றினுங் கடுந்தேர்ச் சக்கர முதலாங்
ககனசா ரிகைகளே ழைந்துஞ்
சாற்றுவித் துவற்பி ராந்தமா தியவாஞ்
சாரிபத் தொன்பது மாகப்
போற்றிவை யனைத்து முட்படப் புட்ப
புடத்திலக் கணமுதற் பொருள்கள். (12)

ஆசவாத் தியமுன் பொருண்முதற் களாச
மாதியாம் பாடபே தங்கள்
பேசிய பதினா [1]றொன்பதும் படக
பேதமொன் றொழிந்தநா லைந்தும்
மாசறு மளக மாதியாம் பாட
வகைகணா லேழுமற் றவற்றிற்
பூசல்வார்த் திகந்தொட் டைவகைச் சச்ச
புடாதியாந் தாளமாத் திரையும். (13)

கிளந்தமாத் திரையின் கதிகளுஞ் சொல்லுங்
கீதமும் பாடமு மெழுத்தும்
வளந்தரு மணிபந் தாதிகீ தத்தின்
வகுத்தகட் டளையெழு நான்கும்
அளந்திடு சரளை யாதிகட் டளையே
ழைந்துநன் [2]கமைந்தபா வாதி
விளம்பிய மூன்று கலப்பு மீறாக
விளைத்திடுங் கூத்தக மார்க்கம். (14)

வேறு

உரைத்தவிக் கூத்துக் கற்கும்
போதுதன் னுடம்பிற் சால

........................................................................

2. றென்பதும். பா.வே. 3. கனமந்துவா. பா.வே.

வருத்தநோ யெய்தி யிந்த
வருத்தநான் மறையுந் தேறா
அருத்தமா யறிவாய் வெள்ளி
யம்பலத் தாடி நின்ற
நிருத்தனார் தமக்கு முண்டே
யென்பது நினைவிற் கொண்டான். (15)

கரியதா மரைக்கண் ணானுங்
கமலநான் முகனுங் காண்டற்
கரியதா ளொன்றே நோவ
வாற்றநா ணிற்ப தந்தோ
உரியதா மிதனைக் கற்று
வருத்தமுற் றோர்ந்து மீது
தெரியநா னிருப்ப தேயோ
வறனெனச் சிந்தை நோவான். (16)

வடுப்படு பிறவிப் பௌவ
வரம்புகாண் கின்ற நாள்வந்
தடுப்பவர் யாவ ரேனு
மவர்க்கெலாம் போகம் வீடு
கொடுப்பவர் செய்யு மிந்தக்
கூத்தையெப் படிநாஞ் சென்று
தடுப்பது தகாதன் றேனும்
வருந்துமே சரண மென்னா. (17)

இதற்கிது துணிவென் றுன்னி
யெழுந்துபோய்ச் சிவனி ராவிற்
கதக்களிற் றெருத்த லேந்துங்
கதிர்மணிக் குடுமிக் கோயில்
மதக்கரி யுரியி னாற்கு
வரம்பறச் சிறந்த பூசை
விதிப்பட்ட யாம நான்கும்
விதிவழி யியற்றல் செய்யா. (18)

